[27th August 1955

**V.—DRAFT SECOND FIVE-YEAR PLAN FOR THE STATE OF MADRAS—*cont.***

SRI V. V. RAMASAMI :—" கனம் தலைவர் அவர்களே, இப்பொழுது விவாதத்திலிருக்கும் இரண்டாவது ஐந்தாண்டு திட்டத்தைப் பற்றி சில வார்த்தைகள் கூற விரும்புகிறேன். இந்தத் திட்டம் நகல் திட்டம் என்று கூறப்படுகிறது. அது மத்திய அரசாங்கத்தினுடைய அங்கீகாரம் பெற்று அசல் திட்டமாக வருவதற்கு இன்னும் சில மாதங்கள் பிடிக்கும் எனத் தெரிகிறது. மேலும், அந்தந்த ஜில்லாவிற்கு வேண்டிய அபிவிருத்திகளைப் பற்றிய திட்டங்கள் சரியாக வகுக்கப்பட்டு அரசாங்கத்துக்கு வந்து சேர்ந்ததாகத் தெரியவில்லை. இருந்த போதிலும், அவைகள் அரசாங்கத்துக்கு வந்து சேர்ந்த பிறகு ஜில்லா வாரியாக விவாதிக்கப்படும் என்று தெரிகிறது. ஆகவே, இப்பொழுது பொதுவாகத்தான் அபிப்பிராயம் சொல்லக்கூடிய நிலைமையில் இந்தத் திட்டங்கள் இருக்கின்றன என்று நம்புகிறேன்."

" முதல் ஐந்தாண்டுத் திட்டம் மத்திய அரசாங்கத்தால் வகுக்கப்பட்டு ஒவ்வொரு ராஜ்ய அரசாங்கமும் அவைகளினால் எவ்வளவு சாத்தியமோ அந்த வழிகளிலே அவைகளைத் தொகுத்து அமுல் நடத்தும் திட்டமாக இருந்தது. அரசாங்கத்தினிடத்திலிருக்கும் நிதியைக் கொண்டும், மக்களிடத்தில் கிடைக்கும்படியான நிதியைக் கொண்டும் பல காரியங்களைச் சாதிக்க வேண்டிய நிலைமையாக இருக்கிறது. ஆனால் மக்களாலேயே பிரேரேபிக்கப்பட்ட அவர்களது குறைகளை நிவர்த்திக்கும்படியான திட்டங்களாக இருக்கும் பக்ஷத்தில், மக்கள் அந்தத் திட்டங்களுக்கு ஆதரவு கொடுத்து வருவார்கள் என்பதைக் குறிப்பிடாமல் இருக்க முடியாது. இருந்த போதிலும், முதல் ஐந்தாண்டுத் திட்டத்தினால் முக்கியமான நன்மை என்னவென்று கேட்டால், ஒவ்வொரு ஜில்லாவிலும் மக்களிடையே ஒரு புது உணர்ச்சி உண்டாகி விட்டது. ஆங்கிலேயர் ஆட்சி காலத்தில் அரசாங்கத்தாரே மக்களுக்கு நன்மை செய்ய வேண்டுமென்ற ஒரு மனோபாவம் இருந்து வந்தது. ஆனால், சுதந்திரம் வந்த பிறகு, முதல் ஐந்தாண்டுத் திட்டம் அமுல் நடந்த பிறகு, மக்களுக்கே தங்களுடைய குறைகளையும் கஷ்டங்களையும் எடுத்துச் சொல்ல உரிமை இருக்கிறது என்ற உணர்ச்சி ஏற்பட்டுவிட்டது. அந்தந்தப் பிரதேசங்களில் மக்களுக்கு என்னென்ன குறைகள் இருக்கிறதோ அதை அவசியம் அரசாங்கம் நிவர்த்தி செய்ய வேண்டும். ஆகவே, மக்களிடையே நிலவி வரும் இந்தப் புதிய உணர்ச்சியை பயன்படுத்தும் நோக்கத்துடனேயே, மத்திய அரசாங்கம் இந்த இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டம் மக்களுடைய திட்டமாக இருக்க வேண்டுமென்று நிர்ணயம் செய்திருக்கிறார்கள். அது மக்களுடைய திட்டமென்றே எண்ண வேண்டியிருக்கிறது. அதற்காகத்தான், ஒவ்வொரு கிராமத்திற்கும், ஒவ்வொரு நகரத்திற்கும், ஒவ்வொரு மாவட்டத்திற்கும் தனித்தனியாக திட்டங்கள் வகுக்கப்பட்டு, அவைகள் அரசாங்கத்துக்கு வந்து சேர்ந்த பிறகு சேர்த்து பொருத்தப்பட்டிருக்கின்றன.

" முதல் ஐந்தாண்டு திட்டத்தில் விவசாயத்துக்கும் நீர்ப்பாசனத்துக்கும் முக்கியத்துவம் கொடுக்கப்பட்டது. அதற்கு வேண்டிய அநேக காரியங்கள் செய்யப்பட்டன. இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் கைத்தொழில்களுக்கு விசேஷ முக்கியத்துவம் கொடுக்கப்படும். அதற்கான அநேக திட்டங்கள் வகுக்கப்பட்டு சேர்க்கப்பட்டிருக்கின்றன. முதலாவது ஐந்தாண்டுத் திட்டத்தின் விவசாய நீர்ப்பாசன திட்டங்கள் அநேக நன்மையை உண்டாக்கி, நம் ராஜ்யத்திலே மக்களுக்குத் தேவையான உணவு கிடைக்கும்படி செய்திருக்கின்றன என்ற ஒரு திருப்தி மக்களிடையே ஏற்பட்டிருக்கிறது. இருந்தபோதிலும், பல கிராமங்களில் நீர்ப்பாசனத்துக்குப் போதிய அளவு மின்சார வசதி கிடைக்கவில்லை என்று சொல்லப்படுகிறது. ஆகவே, இந்த ஐந்தாண்டுத் திட்டத்தில் நீர்ப்பாசன வசதியும் மின்சார வசதியும் கிடைக்கும்படி சரியாகக் கவனித்து வேண்டிய ஏற்பாடுகளை செய்யவேண்டுமென்று

27th August 1955] [Sri V. V. Ramasami]

சொல்லிக் கொள்ளுகிறேன். அடுத்தபடியாக, இப்பொழுது நமது தென் நாட்டிலே ஒன்றிரண்டு ஜீவ நதிகள்தான் உண்டு. அவைகளை நீர்ப்பா சனத்துக்காக உபயோகப்படுத்தி விட்டோம். இன்னும் சில நதிகளை நம் நாட்டுக்குத் திருப்பவேண்டியது அவசியமாக இருக்கிறது. திருவாங் கூர் கொச்சி ராஜ்யத்திதைச் சேர்ந்த அரபிக் கடலில் போய் விழும் பம்பை யார், அப்பர் பெரியார் முதலிய நதிகளின் தண்ணீரை நம் ராஜ்யத்துக்குத் திருப்பி, பயன்படுத்திக் கொள்வதற்காக அந்த அரசாங்கத்துடன் நம் அரசாங்கம் பேச்சு வார்த்தைகள் நடத்தி அந்தத் தண்ணீரை நமக்குப் பயன்படும்படி செய்யவேண்டும். இது நமது அரசாங்கத்தினுடைய கடமை. இதை அவர்கள் கட்டாயம் செய்யவேண்டுமென்று தெரிவித்துக் கொள்ளு கிறேன். இந்த மாதிரி விஷயத்தில் அந்த அரசாங்கத்துடன் அடிக்கடி தொடர்பு வைத்துக் கொள்ளவேண்டும். அப்பொழுதுதான் காரியம் சீக்கிரம் நிறைவேறும்.

"இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் நம் மாகாணத்தில் பெரிய தொழிற்சாலைகளை நிறுவுவதற்கு வேண்டிய பொறுப்பை மத்திய அரசாங் கம் ஏற்றுக்கொண்டிருக்கிறார்கள். அவர்களிடம் இதைப்பற்றி நமது அரசா ங்கத்தார் அடிக்கடி வலியுறுத்திக்கொண்டே இருக்கவேண்டும். இது நமது அரசாங்கத்தின் கடமையாகும். அடிக்கடி நமது அமைச்சர்கள் டெல்லிக்குப் போய் வருகிறார்கள். அவர்கள் டெல்லிக்குப் போவதற்கு வாய்ப்புக் கிடைத்தபோதெல்லாம் இதை மனதில் வைத்துக்கொண்டு மத் திய அரசாங்கத்துக்கு இதைப்பற்றி எடுத்துச் சொல்லவேண்டும். இதற்கு அவர்கள் ஆவன செய்யவேண்டுமென்று நான் வற்புறுத்திக் கேட்டுக் கொள்ளுகிறேன்.

"மத்திய அரசாங்கத்தோடு எவ்வளவுக்கெவ்வளவு நமது அரசாங்கம் நேரடியாக தொடர்பு வைத்துக்கொண்டிருக்கிறதோ அவ்வளவுக்கவ்வ ளவு நமது தேவைகளை அவர்களுக்கு எடுத்துச் சொல்லமுடியும். உதாரண மாக, எங்கள் முனிசிபாலிடியில் sewage பண்ணைக்காக 100 எக்கரா நிலம் வாங்கி போட்டிருந்தோம். அதைப் பயன்படுத்திக் கொள்ளு வதற்கு பணமில்லை என்று சொல்லிக் கொண்டிருந்தோம். மத்திய அரசாங்கத்தின் விவசாய இலாகா ஆபீஸர் வந்து பார்த்து "நாங்கள் பணம் கொடுத்தால் பயன் படுத்த முடியுமா" என்று கேட்டார்கள். இதற்கு வேண்டிய முயற்சி எடுத்துக் கொண்டதால், இப்பொழுது ரூ. 95,000 உதவியாக சாங்ஷன் ஆகியிருக்கிறது. அதே மாதிரி, அடிக்கடி நேரான தொடர்பு வைத்துக்கொண்டிருந்தால் காரியங்கள் கட்டாயம் முடியும். மத்திய அரசாங்கத்தோடு பழக்கமுள்ள, நம் அரசாங்கத்திலும் அனுபவம் வாய்ந்த ஒரு அதிகாரியை நிரந்தரமாக டெல்லியிலேயே வைக்கவேண்டும். இங்கிருந்து மத்திய அரசாங்கத்துக்கு அனுப்பும் கடிதங்களை அவர் உடனுக் குடன் கவனித்து மத்திய அரசாங்கத்திடம் அதை விளக்கி எடுத்துச்சொல்லி, அடிக்கடி அவர்களுக்கு அந்த விஷயங்களைப் பற்றி நினைவுபடுத்திக் கொண்டே இருக்கவேண்டும். அதிகாரிகளுக்குத் தகுந்த அவ்வளவு மதிப் பில்லையென்றால், டெல்லியிலே இதற்காக ஒரு தனி மந்திரியையே வைத்து விடலாம். அப்படிச் செய்தால் காரியங்களை சீக்கிரம் சாதித்துக் கொள்ள முடியும் என்பதைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

"வேலையில்லாத் திண்டாட்டத்தை ஒழிப்பதற்கு கைத்தொழில்கள் அவசியம். நெய்வேலி திட்டத்தை உடனடியாக நிறைவேற்ற நடவடிக்கை கள் எடுக்கவேண்டும். தென்னாட்டிலே கனரகத் தொழிற்சாலை கட்டாயம் அமைய வேண்டும் என்பது என்னுடைய கோரிக்கை. கோயமுத்தூரில் சில மாதங்களுக்கு முன் திட்ட கமிஷன் ஆதரவில் நடந்த ஒரு கூட்டத்தில் பேசும்பொழுது நமது கனம் நிதி மந்திரி அவர்கள் தென் நாட்டில் கணிசமான தொழிற்சாலைகள் இல்லையென்றும், ஆதலால் தென் நாடு புறக்கணிக்கப்படுகிறதென்ற எண்ணம் வளர்ந்து வருகிறதென்றும் அதைத் தடுப்பதற்கு வேண்டி பெரிய ஆலைகள் தென் பகுதியில் அமையவேண்டுமென வற்புறுத்தியிருக்கிறார்கள். சர்க்கார் அந்த உள் நோக்கத்தை மனதில் வைத்துக் கொண்டு வேண்டிய

ஏற்பாடுகள் செய்யவேண்டுமென்று நான் மறுபடியும் வற்புறுத்திக் கேட்டுக் கொள்ளுகிறேன். முதலிலே நம் அரசாங்கம் 394 கோடி ரூபாய்க்கு திட்டம் போட்டிருந்தாலும், அதை மத்திய அரசாங்கம் சுமார் 225 கோடி ரூபாய்க்கு குறைத்து விடக்கூடிய நிலைமை ஏற்பட்டிருக்கிறது. இந்த 225 கோடி ரூபாய்க்கு கட்டாயம் அங்கீகாரம் கிடைத்துவிடும் என்று எதிர் பார்ப்பதாக நமது நிதி மந்திரி சொல்லுகிறார். இந்த 225 கோடி ரூபாயை நாம் எப்படி சமாளிக்கப்போகிறோம் என்பது ஒரு முக்கியமான விஷயம். அரசாங்கத்தார் குறிப்பில் பார்க்கும்பொழுது, இப்பொழுது கேட்கப்பட்ட கடன் தொகையை மக்கள் தாராளமாகக் கொடுத்திருக்கிறார்கள், இன்னும் மேலும் கேட்டாலும் கொடுப்பார்கள் என்ற நம்பிக்கை இருக்கிறது என்று சொல்லுகிறார்கள். நமது கனம் நிதி மந்திரி அவர்கள் ஒரு இடத்தில் சொல்லும் பொழுது 'நமது நாட்டில் வரி எவ்வளவு தூரம் விதிக்கமுடியுமோ அவ்வளவு தூரம் வரி போட்டாய்விட்டது. இனிமேல் வரி ஒன்றும் போடுவதற்கில்லை' என்று குறிப்பிட்டார். அம்மாதிரி சொல்லிவிட்டு, இனி வரி போட்டால் மக்களால் தாங்கமுடியாது. இதையெல்லாம் மனதில் வைத்துக் கொண்டு இன்னும் எவ்வளவு கடன் கோரலாம் என்று யோசித்து மத்திய அரசாங்க உதவியையும் பெற்று இதற்கு ஆக வேண்டிய காரியங்களை கவனித்துச் செய்யவேண்டும். அதைவிடுத்து வரிகள் போட முற்பட்டால் மக்களால் தாங்கமுடியாதென்றும், அரசாங்கம் மீது அவநம்பிக்கையும் ஏற்படுமென்றும் எச்சரிக்க விரும்புகிறேன்.

"பெரிய கனரகத் தொழிலே மத்திய அரசாங்கம் ஒப்புக் கொண்டிருப்பது நமக்கு ரொம்பவும் நல்லது. அதே சமயத்தில் கிராமங்களில் அநேக கைத்தொழில்கள் ஏற்படவேண்டும். விவசாயிகள் ஆண்டிலே 120 நாட்களுக்கு வேலையில்லாமலிருக்கிறார்கள். அவர்களுக்கு வேலை கொடுப்பதற்கு கிராம கைத் தொழில்கள் ஏற்படவேண்டும். நகரங்களிலிருக்கும் கைத்தொழில்களுக்கு உபயோகமாக இருக்கும்படி, கிராமங்களில் சில கைத்தொழில்கள் கட்டாயம் இருக்கவேண்டும். நகரங்களிலிருக்கும் தொழிற்சாலைகளுக்கு வேண்டிய உபகரணங்களை தயாரிப்பதற்கு, அங்கே இல்லாமல் கிராமங்களில் கைத்தொழிற்சாலைகள் ஏற்படுத்தவேண்டும். அப்படிச் செய்தால்தான் கிராமங்களில் இருக்கின்ற மக்களுக்கு நகரங்களுக்கு வரவேண்டுமென்ற வேட்கை ஒழியும். இல்லாவிட்டால் வேலைக்காக ஜீவனுத்துக்காக கிராமங்களிலிருந்து மக்கள் நகரங்களுக்கு வரும் போக்கை மாற்றமுடியாது. கிராம மக்கள் எல்லோருக்கும் வேலை கொடுக்கும் ஒரு திட்டத்தை கிராமங்களில் ஏற்படுத்திக் கொடுத்தால், அங்கிருந்து மக்கள் நகரங்களுக்கு குடி போகும் போக்கையும் நாளடைவில் மாற்றலாம். நகரத்தில் இருக்கும்படியான எல்லா நவீன வசதிகளையும் கோரிக்கைகளையும் கிராமங்களில் கிடைக்கும்படி செய்யவேண்டும்.

"கிராமங்களில் குடிசைக் கைத்தொழில்களை அபிவிருத்தி செய்ய வேண்டும். அங்கு உற்பத்தியாகும் பண்டங்களை உடனடியாக விற்பனை செய்வதற்கு வேண்டிய வசதிகளைச் செய்து கொடுக்கவேண்டும். இல்லாவிட்டால் கொஞ்ச நாட்களிலே மக்கள் சோர்வு அடைந்து விடுவார்கள். குடிசைத் தொழில்களில் ஈடுபடுவதற்கு' கிராம மக்களுக்கு முக்கியமாக பணம் கடன் கொடுத்து உதவி செய்யவேண்டும். அவர்கள் கேட்ட சமயத்தில் கிடைக்கும்படியாகவும் சகாயமான வட்டிக்குக் கிடைக்கும்படியாகவும் கடன் வசதி ஏற்படுத்தவேண்டும். குடிசைத் தொழிலில் ஈடுபடுகிறவர்களுக்கு கூட்டுறவு சங்கங்களின் மூலம் சகாய வட்டிக்கு கடன் கொடுப்பதற்கு ஏற்பாடு செய்வது அல்லது. இந்த விஷயங்களை முக்கியமாக கவனத்தில் கொண்டு கிராம மக்களின் சுபிட்ச வாழ்வில் நாட்டம் வைத்து திட்டங்கள் வகுக்கப்படுவதே சிறந்தது.

"அடுத்தபடியாக, தமிழ் நாட்டைப் பொருத்தமட்டில், கடலோரச் செல்வமாகிய மீன்பிடிப்பை அதிகப்படுத்தவேண்டும். அதைச் சரியானபடி பாதுகாத்து மீன் வளர்ப்புத் தொழிலுக்கு ஆக்கம் அளிக்கவேண்டும். சிறிய துறைமுகங்களிலிருந்து ரோடுகள் போடவேண்டும். சிறிய துறைமுகங்களுக்கும் பெரிய ரோடுகளுக்கும் இணைப்புப் பாதைகள் போட்டு, மீன் பிடிப்பவர்கள் மீன்களை கெடாமல் சீக்கிரம் நகரங்களுக்குக் கொண்டு

27th August 1955] [Sri V. V. Ramasami]

வந்து விற்பனை செய்வதற்கு வசதி செய்துகொடுக்கவேண்டும். தூத்துக்குடி துறைமுகத்தை பெரிய துறைமுகமாக விருத்தி செய்ய முயற்சி எடுத்துக் கொள்ளவேண்டும். கிழக்குக்கரை ஓரமாக சென்னையிலிருந்து தென்கோடி வரை ஒரு பெரிய **coastal road** ஏற்படுத்தினால் கடலோரங் களில் இருக்கும் கிராமங்கள் நகரங்களோடு இணையும். அதோடு கிழக்குக் கரையிலிருக்கும் சிறு சிறு துறைமுகங்களை பெரிதாக்கி அவைகள் இறக்குமதி ஏற்றுமதிக்கு வேண்டிய வசதிகளுடன் இயங்கும்படி செய்தல் அவசியம். அப்படிச் செய்தால் வியாபாரம் வலுக்கும். மக்கள் ஒருவருக்கொருவர் பழகுவதற்கு ஏதுவாக இருக்கும். மீன்பிடிப்புத் தொழிலைப் பற்றி பேசும் பொழுது மற்றொரு விஷயத்தையும் குறிப்பிட விரும்புகிறேன். இப்பொ ழுது அநேக துறையில் மீன் பிடிக்கிறார்கள். ஆபத்தில்லாமல் நவீன முறையில் மீன்பிடிக்கும் வழிகளை மீன்பிடிப்பவர்கள் தெரிந்து கொள்ளு வதற்கு ஏற்பாடுகள் செய்யவேண்டும். அதிலே அவர்கள் பழகுவதற்கு அனேக பயிற்சிப் பள்ளிகள் வேண்டும். இப்பொழுது சென்னை மாகாணத் தில் **63** பயிற்சிப்பள்ளிகள் இருக்கின்றன. இன்னும் அதிகமான பயிற்சிப் பள்ளிகள் ஏற்படுத்தவேண்டும். மலையாளப் பகுதியில் சுமார் **60** பள் ளிகள் இருக்கின்றன. ஆனால் கிழக்குப் பக்கத்தில் **4, 5** பள்ளிகள்தான் இருக்கின்றன. அப்படியிருக்கையில் சந்தோஷப்படாமல், மலையாளம் புறக் கணிக்கப்பட்டதாகச் சொல்லுகிறார்கள். கிழக்குப் பக்கத்தில் மீன் பிடிப் பவர்களுக்காக அநேக பயிற்சிப் பள்ளிகள் ஏற்படுத்தவேண்டும்.

"இந்தத் திட்டத்துக்கு மக்களுடைய ஒத்துழைப்பு கிடைக்கும் என்று எதிர்ப்பார்ப்பதாக சர்க்கார் சொல்லுகிறார்கள். மக்கள் திட்டத்துக்கு அவர் களுடைய ஒத்துழைப்பு அவசியம்தான். **1953–54**-ல், **1954–55**-ல் ஒவ் வொரு ஜில்லாவுக்கும் கொடுக்கப்பட்ட பணத்தையும் செலவழிக்கப்பட்ட பணத்தையும் கணக்கிட்டுப் பார்த்தால், சில மாவட்டங்கள் கொடுத்த பணம் போதாமல் அதையெல்லாம் செலவழித்துவிட்டு அதிகப் பணம் கோரியிருக்கிறார்கள். உதாரணமாக, ராமநாதபுரம் ஜில்லாவில் சர்க்காரை அதிகமாக பணம் கேட்டுக்கேட்டு போதுமானபடி கொடுக்காத நிலைமை ஏற்பட்டது. ஆனால் மலையாளத்துக்கு ஒதுக்கிய பணத்தில் மூன்றில் ஒரு பங்கு கூட பிரயோஜனப் படுத்திக்கொள்ளப்படவில்லை. காரணம் மக்கள் ஒத்துழைப்பு இல்லையென்றுதான் யூகிக்கவேண்டியதாயிருக்கிறது. அப்படி யிருக்கையில் மலையாளம் புறக்கணிக்கப்படுகிறதென்றும் மேலும் மேலும் அதிகமாக வேண்டுமென்றும் கேட்கிறார்கள். ஒரு சமயம் மக்களை மயக்கு வதற்காக அரசியல் வாதிகள் கேட்கிறார்களோ என்னமோ தெரியாது. நான் குறை சொல்லவில்லை. அவர்கள் ராஜ்யம் வந்த பிறகு எப்படித் தான் நடந்து கொள்ளப்போகிறார்களோ தெரியவில்லை. அப்பொழுது நல்ல முறையில் நடந்து கொள்ளுவார்கள் என்று எதிர்பார்க்கிறேன். ஒவ்வொரு மாவட்டத்துக்கும் அதிகமாக பணம் கொடுக்கும் பக்ஷத்தில் மக்களுடைய உணர்ச்சி வளர்ந்து இன்னும் மேலிட்ட ஒத்துழைப்பு கிடைக் கும். மக்களிடையே இம்முறையில் நல்ல பிரசாரம் நடத்தவேண்டும். இல்லாவிட்டால் பலனே இல்லாமல் போய்விடும். 3 p.m

"கிராமக் கண்மாய்கள் சீரமைப்புக்காக நமது சர்க்கார் மத்திய அர சாங்கத்தினிடம் **125** லட்ச ரூபாய் வாங்கி வைத்திருக்கிறார்கள். அதை எப்படி செலவழிப்பது என்று தெரியாமல் இருக்கிறார்கள். சரியான பிரசார மில்லாமல் மக்களின் ஒத்துழைப்பு காலாகாலத்தில் கிடைப்பதில்லை போலும். தாமதம் ஏற்படுவதால் மக்களிடையே சுறுசுறுப்பு இல்லாமலிருக்கிறது. **Contract**-களினால் காரியங்கள் தடைபட்டிருக்கலாம், அல்லது மின் சார வசதி கிடைக்காததால் தாமதம் ஏற்படலாம். இந்த நிலையினால் மத்திய அரசாங்க உதவி கிடைக்காமல் போய்விடுவதற்கு இடம் கொடுக்கக் கூடாது. இதை மக்களுக்கு எடுத்துச் சொன்னால் அவர்கள் கிடைக்கும் வசதியை பயன்படுத்திக் கொள்ளுவார்கள் என்று எதிர்ப்பார்க்கிறேன். மக்களுடைய ஒத்துழைப்பைப் பெறுவதற்கு ஒவ்வொரு பிராந்தியத்திலும் எவை உடனடித் தேவையென்று அங்குள்ள மக்களை திட்டம் வகுக்கச் சொல்லி, அமுல் செய்யவரும்படி அழைக்கவேண்டும். இந்தத் திட்டத்தை சரிவர பயன்படுத்திக் கொள்ளவேண்டியது அவர்களுடைய கடமையென்று

[Sri V. V. Ramasami] [27th August 1955

மக்களிடையே சொல்லி அவர்களுடைய ஒத்துழைப்பைப் பெறவேண்டும். பிற்பட்ட மாவட்டங்களுக்கு அதிகமான வசதிகள் கிடைக்கும்படி செய்ய வேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

" கடைசியாக ஒரு வார்த்தை. சில பெரிய நகரங்களிலே குடி தண்ணீர் திட்டம் இருந்தபோதிலும் வடிகால் **(drainage)** திட்டம் இல்லாமல் இருக்கிறது. குடி தண்ணீர் திட்டமும் வடிகால் திட்டமும் சேர்ந்திருக்க வேண்டும். எங்கள் ஊரில் வடிகால் திட்டம் **1936–37**-ல் சாங்ஷன் ஆகி இன்னும் முடியாமலிருக்கிறது. குறுகிய காலத்திட்டம் ஒன்று போட்டு **1943**-ல் பணம் கொடுத்த போதிலும் இன்னும் அது நிறைவேற்றப்படாமலிருக்கிறது. டிசைன் போடுவது ஒரு இலாகா, நிறைவேற்ற வேண்டியது மற்றொரு இலாகா, பணம் கொடுப்பது முனிசிபாலிட்டி, இப்படி ஒன்றுக்கொன்று சம்பந்தமில்லாமல் மாறுதலாக இருக்கிறது. முக்கியமான நகரங்கள் இம்மாதிரி திட்டங்களில் தாங்களே பொறுப்பு எடுத்துக்கொண்டு அரசாங்க மேற்பார்வையில் இவைகளை நிறைவேற்ற முன் வந்தால் சீக்கிரமாக முடித்துவிடலாம். கொடுத்த பணத்தை வீணாக செலவழிக்காமல் மக்களுடைய உணர்ச்சியைப் பயன்படுத்திக்கொண்டு அவர்களிடமிருந்து வேண்டிய ஒத்துழைப்பை சரியான முறையில் பெறவேண்டும்.

" நமது நாட்டிலே பெரிய தொழிற்சாலைகளை நிறுவுவதற்கு மத்திய சர்க்காரிடம் வற்புறுத்துவதோடு அல்லாமல், மாநிலத்தில் ஏற்படவேண்டிய சிறு கைத்தொழில்களுக்கும் தனிநபர் தொழில்களுக்கும் நம் மாகாண அரசாங்கம் எவ்வாறாகிலும் பண உதவி செய்து மக்களுக்கு ஆக்கம் அளிப்பார்கள் என்று எதிர்பார்த்துக் கொண்டு, என்னுடைய வார்த்தைகளை முடித்துக்கொள்ளுகிறேன்."

Sri T. G. KRISHNAMOORTHI :—" Mr. Chairman, Sir, of course, most of the hon. Members have spoken on the Second Five Year Plan. Before proceeding to talk about the Plan itself, I would like to point out to the Chairman a very serious omission in the First Five Year Plan, namely, improving the seating accommodation of the Members of this House. (Laughter.) There is no arm-rest and, as the Chairman and the hon. Members could well see, it is absolutely impossible to stand erect and talk with the table in front and no space between the seat and the table. Especially for a man like myself who happens to have a slight paunch, it is definitely inconvenient to stand for any length of time. I may mention this in passing.

" I went through the Second Five Year Plan. I was really impressed by the very high imagination of our Government in drawing up a Plan which is both realistic and goes a great length in satisfying the aspirations of our people. Of course, critics there may be and they will criticise anything. The First Five Year Plan period is nearing completion and we are going to launch the Second Five Year Plan. What has been our achievement under the First Five Year Plan? It has been tremendous. We never bargained for so much co-operation from the public, so much co-operation from the officials, and in spite of the very violent propaganda carried on against the First Plan by certain political parties in the most derisive language, the First Five Year Plan has after all been quite a success. It was thought that in a democratic set-up planned economy is impossible. Strict regimentation and the attendant totalitarian control were thought to be necessary to make the Plan a success whereas here was a country where

27th August 1955] [Sri T. G. Krishnamoorthi]

due to the drive and the initiative of our illustrious Prime Minister followed on no less a scale by the State Ministers, we have not only got the co-operation of the people but have produced tangible results. The food problem has been solved. Russia of which so much is being spoken of to-day launched upon a First Five Year Plan in the year 1928 and in the year 1933 at the end of the completion of the First Plan, the worst family the world saw anywhere occurred in Russia. But what have we done here? Even during the worst famine, we did not allow a single individual to perish. We have overcome the difficulty and it appears we are now surplus in food. If this is not an achievement for the hon. Member Dr. V. K. John, I do not know what he will consider to be an achievement?

"If we go to the villages and see what is happening there, everywhere we find there is activity under the National Extension Service Schemes, the Local Development Schemes and the Community Projects. The villagers are satisfied. Villagers, who were in the beginning a little apathetic, have come to know how beneficial these measures are to them. Something was said about the 50 per cent contribution. Of course, it is difficult for certain people. But they can contribute through labour. Some of the villagers have taken contracts to work under Local Development Schemes and the Community Projects Schemes for laying village roads, veterinary dispensaries, maternity centres, etc. Our Prime Minister Nehru, while addressing a mammoth public meeting of villagers a few years ago was seen to be shedding tears. Why did he shed tears? He said: 'These lakhs and lakhs of people are assembled here in the hope that I am going to bring them salvation and that I am going to solve all their problems and usher in an era of peace and plenty. Will I be able to achieve all this before I die? I do not know'. He was afraid. He looked all around and noticed there was poverty. Our position then was that a man 6 feet tall was not able to cover his whole body with a bed-sheet 5 feet long. If he wanted to cover his head, his legs and feet would be exposed. If he wanted to cover his feet, his head was exposed. So we can just imagine the plight of such a man in a cool place. It was in the same plight that we were then. Now we have tided over the crisis."

Dr. V. K. JOHN :—"Will the Government consider giving the hon. Member a leading place in the propaganda machinery of the Government?"

The Hon. Sri M. BHAKTAVATSALAM :—"Sir, there is no place that the Government can give. It is not only for the hon. the Deputy Leader of the Opposition but also for the hon. Member who is speaking for the people, to take their due legitimate places."

Sri T. G. KRISHNAMOORTHI :—"Of course, I agree with the Hon. Minister. But I should tell the hon. Member Dr. V. K. John that India, more than any other country, expects every man

to do his duty and the duty of the Member of the Opposition is not to sit idle at home and criticise the Government in the Council but contribute his mite for the amelioration of the condition of the masses and to make the Plan a great success. (Laughter.) Of course, he can mention certain items that have been omitted. But where is the wherewithal to take up all the schemes? We are already taxed much. How long can we go on taxing the people? All these things should be taken into consideration.

" So, during the First Five Year Plan, it was unfortunate that we in the South faced a very serious famine. There was no rain. Food production went down. We had to depend upon outside States for our food requirements. There was continuous drought for four or five years. Of course, our position then was bad. Added to that, immediately after the Congress Ministry was formed here, we were afraid that the whole administration would collapse. There was acute famine. We were not able to solve it. Added to that, the then Chief Minister of Madras launched upon certain pet schemes of his that engendered so much of controversy in our State. He brought in the elementary education scheme and communal bitterness and rancour developed on account of that. Most of us were worried where we were heading. Fortunately, the regime changed and we are now having a Government under the leadership of the present Chief Minister who has been with the masses and who has come from the masses and knows their sufferings. Communal rancour has vanished and all the other problems have been solved. The timely withdrawal of the modified elementary education scheme saved this State from the
3-10 p.m catastrophe towards which this State was heading. Now we are in peace and quiet and everything is prospering. I read some time back in the papers the speech of our ex-Chief Minister Mr. C. Rajagopalachari somewhere in Bombay that this Government was not good enough, at least was not as good as the Government of Bombay. I was very much worried and I rushed to the Press with a statement of mine. But on further consideration I thought I need not have done it. Mr. Rajagopalachari was an angry man. He was angry with God. He was angry with Nature that was not co-operating with him. He was angry with the people who raised so much hubbub against his elementary education scheme. Now in spite of his best propaganda against B.C.G. vaccination, no individual seems to raise his voice against B.C.G. campaign. So he was very much worried. He was frustrated. He was a man of large ambition—lingering ambition—but frustrated ambition. As an angry man he has said this. As a balanced individual enjoying very good Government, I need not have gone to the Press I thought. This is by way of digression, Mr. Chairman.

" Coming to the Second Five-Year Plan . . . (Interruption by Dr. V. K. John). I hope Dr. John understands English."

MR. CHAIRMAN :—" The hon. Member will continue his speech on the Five-Year Plan."

27th August 1955]

SRI T. G. KRISHNAMOORTHI :—" Of course I was comparing the administrations. Coming back to the Second Five-Year Plan, Sir, hon. Members have dwelt at length upon certain omissions. Of course, nobody is more interested in the people than the present Government. Our Finance Minister is a young man. We should expect him to have as much drive if not more than that of Dr. John himself. The Hon. Mr. M. Bhaktavatsalam, Minister for Agriculture, has been Minister for a pretty long time. Under him, the P.W.D., and now the Agricultural Department is progressing by leaps and bounds. People acknowledge it. Dr. John sitting in his bungalow may not have time to visit rural areas and see for himself the development that has taken place, least of all the forest areas. His Kodaikanal bungalow is not in the midst of forests. Far away from his bungalow is the forest area, which the Government are trying to improve. We read in the papers how our Finance Minister fought in Delhi so that the cost of our schemes might not be cut down. The provision of Rs. 225 crores for the five-year period of the plan is quite realistic and we can achieve considerable results under this plan. One suggestion I will try to give to Government. As Dr. John himself has observed, we are concerned with the improvement of the purchasing power of our people. How are we going to achieve it? So far as Tamilnad is concerned, we can never hope to be self-sufficient in food. The protagonists of Tamil may speak about the Sangam days when there was prosperity and all that. Our rivers except perhaps Cauvery have not been giving us plentiful supply of water at all. From time immemorial it was the Tamilian that went to overseas countries. Nobody else from India went overseas. Why did he alone go overseas? It is not in any spirit of adventure. He went to foreign lands to seek food and employment and earn profits. So far as Tamilnad is concerned, we can never be self-sufficient in food. Our water resources are poor. So industry alone is our salvation. Regarding the establishment of a steel plant, I say that we cannot establish it here because the coal position is not good. Electricity position is not good. Our Government some time ago launched upon irrigation project schemes. Formerly it was a question of a certain percentage of return from any project. Later on the Government changed their policy and said, 'It is not profit motive that we are concerned with; if necessary, we execute irrigation projects'. Just like this we should have industries. In the Second Five-Year Plan, millions of jobs are sought to be created, out of which only 200,000 will be created in the South. We are a population of 3½ crores, and about 200,000 jobs, during the whole period of five years, in the South, are absolutely inadequate, and we will have to face the serious unemployment problem—the problem of the educated, uneducated, skilled labourers, and unskilled labourers. So we should create more jobs for our people. How are we going to create more jobs? By establishing industries, we should not care for profit. We should have large scale industries, and the Government should put up a fight, as the hon. Member Sri O. P. Ramaswami Reddiar

[Sri T. G. Krishnamoorthi] [27th August 1955

said. I asked him, 'With whom and how?' He refused to answer. We should put up a fight with the Central Government. What are the people of Andhra doing? What are the people of Bengal, Punjab, Hyderabad, etc., doing? They go and tell the Central Government, 'Look here; there are the Communists; they will swallow the country and sweep the polls if you are not going to do this.' They threaten the Central Government and they get crores of rupees. From Poona to Bombay it is more than 100 miles. Throughout this distance, it is a wonderful sight to see. Crores of rupees on industries have been invested, and everywhere new industries are springing up. But between Madras and Madurai in the South, it is really a bleak desert. The Neiveli Project is just like Addison's speech in Parliament. He conceived thrice but brought forth nothing. When are we going to produce anything from this Neiveli? I do not know anything about the scheme of this project. When and how are we going to produce anything out of this project, I do not know. I do not know how are we going to find employment for hundreds of thousands of our people. So, we should tell the Central Government, 'If you are not going to do this, a sort of centrifugal forces that have started to operate in the South now will gain momentum, and we cannot check it; so the South must be industralized'. There must be large scale industries, medium industries, and small scale industries in the South. The Government must concentrate on these.

"Regarding the finances for implementing the Second Five-Year Plan, I must say that our State cannot hope to tax people any more. Neither the Centre in my opinion. I am not an expert, but so far as I have been able to glean facts from so many experts and specialists in the field of economics, I think we can resort to deficit financing. Immediately after we attained independence, what we did was very seriously to launch upon a scheme of deflation. If the prices of agricultural products and commodities have fallen, it does not necessarily mean that there has been so much of production in these items but that the deflationary tendency is so high that the prices have naturally fallen. This is my own impression. We have taken deflation too far, and a certain amount of inflationary current will be conducive to a change for the betterment of our economic position. This is my feeling. We can resort to deficit financing by some crores of rupees. We can print small denomination notes and need not issue them through banks but take them to the national extension services and community project areas. There are backward districts. Even in those districts, there are backward taluks. In very forward districts, there are backward taluks. In those areas not only do the people not contribute their half-share for the development works, but they also cannot contribute free labour. Because if a man works for one day free, he does not earn his wages for one day. Most of the villages are in backward taluks. Even in my own district, this is the position in Tirumangalam and Palni taluks. In these places we can pay wages to the labourers

27th August 1955]     [Sri T. G. Krishnamoorthi]

with these new notes. Thereby the purchasing power of the people will increase, and the savings of the people also will increase. The savings will come back to the Government in the shape of loans to Government.

" Our Government could borrow still further. We can easily afford to have about Rs. 200 crores debt. In that way, we can increase the purchasing power of the people, produce more employment and make the condition of the people better. Under the Rs. 225 crores investment, definitely our status will rise. With the irrigation projects and the emphasis laid more on industrial development, instead of feeling shy, if we fight with the Central Government and get substantial contribution for industrial development in the South, we will definitely advance. I can assure hon. Members of this House that our Government are proceeding in the right direction, they have an eye only to the good of the people and they will spare no pains to see that we not only achieve our objective under the Second Five-Year Plan but even overstep it and lay the foundation for the Third Five-Year Plan also."

* **Sri M. ETHIRAJULU** :—" சேர்மன் ஸார், இரண்டாவது ஐந்து வருஷத் திட்டத்தைப் பற்றி சில வார்த்தைகள் சொல்ல விரும்புகிறேன். முதல் ஐந்து வருஷத் திட்டம் முடிவதற்குள்ளேயே இரண்டாவது ஐந்து வருஷத் திட்டம் போட்டாய்விட்டது.. முதல் ஐந்தாண்டுத்திட்டத்தில், இந்தியா சுதந்திரம் அடைந்தபிறகு முன்னேற்றமடைந்ததுபோல் மற்ற எந்த நாடும் முன்னேற்றம் அடைந்திருக்காது. இதில் யாதொரு சந்தேகமுமில்லை. குறிப்பாக எடுத்துக் கொண்டு பார்க்கும் பொழுது லோயர் பவானி அணைக்கட்டு முடிவு அடைந்து வருகிற செப்டம்பர் 9-ம் தேதியிலிருந்து 2 லட்ச எக்கரா நிலங்களுக்குப் பாசன வசதி அளிக்கப்போகிறது. மணிமுத்தாறு, மேட்டூர் வாய்க்கால் சாத்தனூர் அணைக்கட்டு மற்றும் பல அணைக்கட்டுகள் துரிதமாக வேலை நடந்துகொண்டிருக்கிறது. இன்னும், முதல் ஐந்தாண்டுத்திட்டத்தில் 1,360 மைல்களுக்கு மேல் ரோடுகள் போடப்பட்டிருக்கின்றன, 190 மைல்களுக்குமேல் மெடல் ரோடுகள் போடப்பட்டிருக்கின்றன. 2,400 கிராமங்களுக்கு மின்சார வசதி செய்து கொடுத்திருக்கிறார்கள். 25,500 பம்பு செட்டுகளுக்கு மின்சார வசதிகிடைத்திருக்கிறது, 40 லட்ச கஜங்கள் கதர் துணி உற்பத்தி செய்யப்பட்டிருக்கிறது. இன்னும் பல அரிய பெரிய காரியங்களும் செய்யப்பட்டிருக்கின்றன. ஆகவே இந்தியாவைப்போல் இந்த அளவுக்கு இவ்வளவு சீக்கிரம் எந்த நாடும் முன்னேற்றமடையவில்லையென்று நான் நிச்சயமாகக் கூற முடியும்

" இரண்டாவது ஐந்தாண்டுத்திட்டத்தில் கிராமங்களுக்கு பள்ளிக்கூடவசதி மின்சார வசதி, குடி தண்ணீர் வசதி, படிப்பு வசதி, போக்குவரத்துவசதி, கிராமக்கடன் பாங்குகள் வசதி, இப்படி எல்லாவிதமான திட்டங்களையும் சேர்த்திருக்கிறார்கள். இன்னும் ஒவ்வொரு ஜில்லாவிலும் ஆஸ்பத்திரிகள் வசதி, அதிகப்படுக்கை வசதி, T B, கிளினிக், குஷ்டரோக நிவாரணம், மருத்துவ விடுதிகள், சிசு சம்ரக்ஷணை சாலைகள் ஆகியவைகளும் ஏற்படுவதற்கு திட்டங்கள் போட்டிருக்கிறார்கள். இதை இரண்டாவது ஐந்தாண்டு திட்டம் என்று சொல்லுவதை விட கிராம மக்கள் நிவாரண முன்னேற்றத் திட்டம் என்று சொன்னால் மிகவும் பொருத்தமாயிருக்கும். இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டம் குறித்து யாரும் குறை கூற முடியாது என்று மிக மிகப் பெருமையுடன் சொல்லிக் கொள்ள ஆசைப்படுகிறேன்.

" இந்தத்திட்டத்தில், சில முக்கியமான விஷயங்களில் கனம் அமைச்சர் அவர்கள் கவனம் செலுத்த வேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன். சில ஊர்களிலே படிப்பதற்குக் கல்லூரிகள் இல்லை. ஆனால் சில ஊர்களில் தனிப்பட்டவர்கள் கல்லூரியுடன் சர்க்கார் கல்லூரியும் நடக்கிறது.

சில பகுதிகளில் 3, 4 கல்லூரிகள் இருக்கின்றன. சில பகுதிகளில் ஒன்றுமே கிடையாது. சில பகுதிகளில் தனிப்பட்டவர்கள் கல்லூரியைத் தவிர சர்க்கார் கல்லூரி கிடையாது. குறிப்பாக பார்க்கப் போனால் தென் ஆற்காடு ஜில்லா மிகவும் எல்லாத் துறையிலும் பிற்போக்கான ஜில்லா. அங்கு அண்ணாமலை சர்வகலாசாலை கல்லூரியைத் தவிர சர்க்கார் கல்லூரியே இடையாது. அங்கே மிகவும் பிற்பட்ட இனத்தவர்கள் 100-க்கு 90 சத விகிதம் இருக்கிறார்கள். அவர்கள் இப்பொழுது படித்து கொஞ்சம் முன் னேற்றம் அடைந்து கொண்டு வருகிறார்கள். S.S.L.C. பாஸ் செய்து விட்டு, கல்லூரியில் இடத்துக்காக ஊர்ஊராக அலைந்து தவிக்கும் நிலைமை ஏற்பட்டிருக்கிறது. ஆகையால் இந்த ஜில்லாவில் ஒரு கல்லூரி மிகவும் அவசியமாக இருக்க வேண்டும். இதை இரண்டாவது ஐந்து வருஷ திட்டத் தில் சர்க்கார் சேர்த்து கல்லூரி அடுத்த நடப்பு வருஷத்தில் கண்டிப்பாய் கொண்டுவரவேண்டும். அடுத்த படியாக தென் ஆற்காடு ஜில்லா விவ சாயம் நிறைந்த ஜில்லா. அதற்குப் பக்கத்திலிருக்கும் தஞ்சாவூர் ஜில் லாவும் அப்படியே. ஆகையால் அங்கு ஒரு விவசாயக்கல்லூரி வேண்டு மென்று சென்ற கூட்டத்திலேயே சொன்னேன். விவசாயக்கல்லூரி ஆரம் பிக்க அதற்குப் போதுமான வசதிகள் அண்ணாமலைக் கல்லூரியில் வைத் திருக்கிறார்கள். அங்கு விவசாயக்கல்லூரி ஏற்படுத்தினால் விவசாய மக் களின் குழந்தைகள் விவசாயத் துறையில் தங்கள் முழு கவனத்தை செலுத்தி படிக்க முன் வருவார்கள். விவசாயமும் அதிகரிக்கும். அபரிமித மாக விளைவை எதிர்பார்க்கலாம். இந்த விஷயத்தை அரசாங்கம் கவனிக்க வேண்டும். அடுத்த படியாக சர்க்கார் தாங்களே வேலையில்லாத் திண் டாட்டத்தைப்போக்க முடியும் என்று கருத மாட்டார்கள் என்று நினைக்கி றேன். கோடான கோடி பேர்களுக்கு அவர்களால் எப்படி வேலை கொடுக்க முடியும். பெரிய தொழிற்சாலைகளை ஏற்படுத்தித்தான் வேலையில்லாத் திண்டாட்டத்தைப் போக்க முடியும் என்ற முடிவுக்கு சர்க்கார் வர வேண்டும். குறிப்பாக நம் சென்னை மாகாணம் பின் தங்கிய மாகாணம். மற்ற மாகாணங்களைப் போல் நம் மாகாணமும் இருந்தால் எவ்வளவோ காலத்துக்கு முன்பே வேலையில்லாத்திண்டாட்டத்தைப் போக்கி இருப்போம். நமது மாகாணம் பின் தங்கிய மாகாணம் என்று நமது அமைச்சர்கள் மத்திய சர்க்காரிடம் வற்புறுத்தி நம் மாகாணத்தில் பல பாகங்களில் பல கைத்தொழில்களை ஏற்படுத்த வேண்டும். கனம் அங்கத்தினர் டி. ஜி. கிருஷ்ணமூர்த்தி அவர்கள் சொல்லியது போல் வேறு எந்த விதத்திலும் வேலையில்லாத்திண்டாட்டத்தைப் போக்க முடியாது. வேலையில்லாமல் திண் டாடுபவர்களை மூன்று விதமாக பிரிக்கலாம். மிகப் படித்தவர்கள் திண்டாட்டம், படிப்பில்லாதவர்கள் திண்டாட்டம், மிகக் குறைவான அரை குறை படிப்பு உள்ளவர்கள் திண்டாட்டம், ஆகிய எல்லாம் சேர்ந்து கொண்டிருக்கிறது. ஆகையால் சர்க்கார் இதையெல்லாம் சீக்கிரம் கவ னித்து மத்ய சர்க்காரிடம் வற்புறுத்தி பெரிய தொழிற்சாலைகளை உடனடியாக மாகாணத்தில் அமைப்பதற்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்ய வேண்டும். நெய்வேலித் திட்டத்தை சீக்கிரம் அமுல் நடத்த வேண்டும். அப்படிச் செய்தால் சென்னை மாகாணம் வெகுவாக முன்னேற்ற மடையும். தென் ஆற்காடு ஜில்லா பொன் ஆற்காடு ஜில்லா என்று சொல்லும்படியாக முன்னேறிவிடும். இதனால் பல்லாயிரக்கணக்கான மக்களுக்கு வேலை கொடுக்கமுடியும். இந்த விஷயத்தை மிக சீக்கிரம் கவனித்து வேண்டிய ஏற்பாடு செய்ய வேண்டுமென்று சர்க்காரைக் கேட்டுக் கொள்ளுகிறேன்.

" ஜில்லா போர்டுகள் ஆஸ்பத்திரிகளை தங்கள் பராமரிப்பில் நடத்து கிறார்கள். உதாரணமாக 12 ஆயிரம் மக்கள் என்று வைத்துக்கொள் வோம். பன்னிரண்டு ஆயிரம் மக்களுக்கு ஒரு ஆஸ்பத்திரி இருக்கிறது. ஆனால், அந்த ஆஸ்பத்திரியில் வருஷத்திற்கு ரூ. 2,000 பொறுமான மருந்துகள் தானிருக்கின்றன. அதை வைத்துக்கொண்டு எப்படி 12,000 பேர்கள் பயனடைய முடியும். இதனால் ரொம்பவும் கஷ்டம் ஏற்படுகிறது. இதைச் சீக்கிரத்தில் கவனித்து இந்தக் கஷ்டத்தை நிவர்த்திப்பதற்கு வேண்டிய நடவடிக்கைகளை எடுத்துக்கொள்ள வேண்டுமென்று கேட்டுக் கொள்ளுகிறேன். ஜில்லா போர்டார் ஆஸ்பத்திரிகளை நடத்த சர்க்கார் அனுமதிக்காமல் எல்லா ஆஸ்பத்திரிகளையும் சர்க்காரே நடத்தி தீர வேண்டும். அப்பொழுதுதான் மக்கள் பயனடைவார்கள்.

27th August 1955] [Sri M. Ethirajulu]

"அடுத்த படியாக N.G.O.-க்களுக்கு நான்கு ஜில்லாக்களில் ஜில்லா ஒன்றுக்கு 100 வீடுகள் கட்டிக்கொடுப்பதாகச் சொல்லப்பட்டிருக்கிறது. இன்னும் அவர்களுக்கு அதிகமாக வீடுகளைக் கட்டிக் கொடுக்க வேண்டும். அவர்களுக்கு நன்மை செய்யவேண்டியது அவசியம். இங்கு பல சட்டங்கள் இயற்றப்படுகின்றன. பல திட்டங்கள் போடு கிறோம். இதை எல்லாம் N.G.O.-க்கள் தான் சரிவர அமுல் நடத்த வேண்டும். அவர்கள் திருப்தியோடு வேலை செய்ய வேண்டும். அவர்களுக்குப் போதுமான சம்பள வசதி கிடைக்கும் நாள் வெகு தூரத்திலிருந்தாலும், Co-operative Society-கள் ஏற்படுத்தி அவர்கள் வாங்கும் அன்றாட உணவுப்பொருள்களையாவது சர்க்கார் வாங்கும் விலைக்கே கடனாகக் கொடுத்தால் அவர்கள் ஒருவாறு திருப்தி அடை வார்கள் என்று நினைக்கிறேன். நான்கு ஜில்லாக்களில் மட்டுமில்லாமல், எல்லா ஜில்லாக்களிலும் அவர்களுக்கு வீடுகள் கட்டிக்கொடுக்க வேண்டு மென்று கேட்டுக்கொள்ளுகிறேன். N.G.O-க்களின் குறைகளை நீக்கி சீக்கிரம் சர்க்கார் அடுத்த பட்ஜெட்டிலாவது நன்மை செய்வார்கள் என எதிர் பார்க்கிறேன்.

"இந்த ஐந்தாண்டுத் திட்டத்தில் மீன் பிடிப்பவர்கள், ஹரி ஜனங்கள், Scheduled Tribes இவர்களுக்கு குறைந்த செலவில் சிறு வீடுகள் கட்டிக் கொடுப்பதற்கு ஒரு திட்டம் சேர்க்கப்பட்டிருக்கிறது. அவர்களை விட மிகவும் பிற்பட்ட இனத்தவர்கள் இருக்கிறார்கள். அவர் கள் பெயர் ஒன்றும் சொல்ல வேண்டியதில்லை. கனம் அமைச்சர் அவர் களுக்குத் தெரியும். அதாவது barbers, washermen இவர்களைக் குறிப்பிடுகிறேன். அவர்களுக்கும் வீட்டு வசதி செய்து கொடுப்பதற்கு ஒரு திட்டம் போட வேண்டுமென்று கனம் அமைச்சர் அவர்களைக் கேட்டுக் கொள்ளுகிறேன். டோபிகள் பொது மக்கள் துணிகளை வெளுப்பதற்காக எடுத்துக்கொண்டு போய் கிராமங்களில் குடிசைகளில் வைக்கிறார்கள். ஏதாவது ஒரு சமயத்தில் தீ பிடித்துக்கொண்டால் எல்லா துணிகளும் நாச மாய் போய்விடும். அவர்கள் குடும்பங்களும் பாதிக்கப்படும். மேலும் அவர்கள் பட்டிணங்களில் மூலை முடுக்குகளில் வாடகைக்கு வீடு எடுத்து வாழ்க்கை நடத்தி வருகிறார்கள். அவர்கள் வீடுகளுக்கு தக்க பாதுகாப்பு இடையாது. பொது மக்களின் விலை உயர்ந்த துணிகளை எல்லாம் எடுத்துப் போய் மேற்படி வீட்டில் வைக்கும்பொழுது, சில சமயங்களில் திருட்டும் போகிறது. ஆகையால் அவர்களுக்கு பொது மக்கள் நன்மையைக் கருதியாவது டவுன்களில் பாதுகாப்பான இடங்களில் அவர்கள் கும்பலாக இருக்கும் இடங்களில் குறைந்தசெலவில் சிறு வீடுகள் கட்டிக் கொடுக்க சர்க்கார் உடனடியாக ஏற்பாடு செய்யவேண்டும்.

"நான் மற்றொரு விஷயத்தைப்பற்றி சொல்ல விரும்புகிறேன். பிற்பட்ட இனத்தவர்கள் கமிஷன் டில்லியிலிருந்து சென்னைக்கு வந்தபொழுது அதன் தலைவர் ஸ்ரீ கலேல்கரிடம் நான் 'பிற்பட்ட இனத்தவர்களில் 153, 154 ஜாதிகள் சேர்க்கப்பட்டிருக்கின்றன. அப்படி எல்லா ஜாதிகளை யும் ஒன்று சேர்த்தால் படுபாதாளத்தில் இருக்கக்கூடிய பிற்பட்ட இனத் தவருக்கு சரியான சலுகை கிடைக்காது. ஆகையால் 'backward' more backward, most backward என்று பிற்பட்ட இனத்தவர் களை மூன்று பிரிவுகளாக பிரிக்க ஏற்பாடு செய்ய வேண்டும்' என்று சொன்னேன். பின் தங்கியவர்கள் யார், மிகப் பின் தங்கியவர்கள் யார், மிக மிகப் பின் தங்கியவர்கள் யார் என்று கண்டு பிடிக்க ஒரு கமிட்டி நியமிக்க வேண்டும். அவர்களுக்கு படிப்பு வேண்டும். படிப்புக்கு வேண் டிய வசதிகள் இருக்க வேண்டும். most backward ஜாதியினர் கள் பொருளாதாரம், கல்வி, அரசியல் ஆகிய மூன்று துறைகளிலும் முன்னேறுவதற்கு வழி செய்ய வேண்டும். இதை நமது சர்க்கார் மத்திய சர்க்காரிடம் வற்புறுத்தி மேலே சொன்னபடி பிரிக்க கேட்டுக்கொள்ள வேண்டும். சீக்கிரமாக பிற்பட்ட இனத்தவர்களை மூன்று விதமாக பிரிப்ப தற்கு நமது மாகாண சர்க்கார் ஒரு கமிட்டி நியமனம் செய்ய வேண்டும். நமது தவப்புதல்வர்கள் கனம் காமராஜ், சுப்பிரமணியம், பக்தவத்சலம் ஆகியவர்கள் தான் இதைச் செய்வதற்கு உண்மையான தகுதி வாய்ந்த

[Sri M. Ethirajulu] [27th August 1955

வர்கள். இந்த மூன்று மந்திரிகளும் இதைச் செய்யாமல் போனால் வேறு எந்த மந்திரி சபை வந்தாலும் இதைச் செய்ய முடியாது. ஆகையால் இதை உடனே செய்யும்படி அவர்களை வற்புறுத்திக்கேட்டுக்கொள்ளுகிறேன்.

3-30 p.m. "தென் ஆற்காடு ஜில்லாவில் கரும்பு அதிகமாக விளைகிறது. கரும்புச் சக்கையால் காகிதம் உற்பத்தி செய்யலாம் மேலும் காகிதம் உற்பத்தி செய்வதற்கு அனுகூலமாக அங்கு சவுக்கை, மூங்கில் இவைகள் ஏராளமாக இருக்கின்றன. ஆகையால் இந்த ஜில்லாவில் ஒரு காகிதத் தொழிற்சாலை ஏற்படுத்த வேண்டும். இன்னும் சர்க்கரை ஆலேயும் இங்கு ஏற்படுத்த வேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன். மற்றும் முந்திரி இங்கு அதிகமாக உற்பத்தியாகிறது. முந்திரிக்கொட்டையிலிருந்து எண்ணை எடுக்கிறார்கள். ஆகையால் எண்ணை தொழிற்சாலையை பண்டுருட்டியில் ஏற்படுத்த வேண்டும். கூடை முறம் முடைதல், பாய் முடைதல், சட்டி பானை செய்தல் போன்ற கிராமங்களிலுள்ள குடிசைத் தொழில்களுக்கு ஆதரவு கொடுத்து வேலையில்லாத் திண்டாட்டத்தை முதலில் கிராமத்தில் போக்க வேண்டும். இந்தமாதிரியான குடிசைத் தொழில்களை அபிவிருத்தி செய்வதற்கு வேண்டிய வசதிகளைச் செய்வதற்கு கூட்டுறவு சங்கங்கள் மூலம் பணம் கொடுக்க வேண்டும்.

"பிற்பட்டவர்களின் உத்தியோக விஷயத்தைப்பற்றி சில வார்த்தைகள் கூற விரும்புகிறேன். **Service Commission**-க்கே எல்லாவிதமான பொறுப்பையும் கொடுத்துவிடக்கூடாது. 25 சத விகிதம் உத்தியோக நியமன அதிகாரத்தை குறிப்பாக அமைச்சர்களே வைத்துக்கொண்டு அமைச்சர் அவர்களே **most backward**-ஆக இருப்பவர்களைப் பொறுக்கி எடுத்து அவர்களை நேரடியாக கூப்பிட்டு தகுதியையும் திறமையையும் பார்த்து தாங்களே அவர்களுக்கு உத்தியோகங்கள் வழங்கவேண்டும். 75 சத சிகிதம் உத்தியோகங்களை வழங்கும் அதிகாரத்தை **Service Commission**-க்கு விட்டு விட்டு மீதி 25 சத விகித உத்தியோகங்களை கனம் அமைச்சர் அவர்களே மிகவும் பின் தங்கியவர்களுக்கு வழங்க வேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன். இது வரை **Service Commission** மிகவும் பின் தங்கியவர்களுக்கு ஒரு சலுகையும் காட்ட வில்லை. மிகவும் பின் தங்கியவர்களை மெம்பராகவும் அங்கு போட வேண்டும்.

"அடுத்த படியாக **Service Commission** பரீக்ஷைக்கு (உத்தியோகத்திற்கு) **S.S.L.C.**-ல் 40 மார்க்குகள் வாங்கியிருந்தால் தான் போக முடியும் என்று நிபந்தனை இருக்கிறது. ஆகையால் ஒன்று இரண்டு மார்க்குகள் குறைவாக வாங்கியிருப்பவர்கள் பரீக்ஷைக்குப் போக முடியாமல் அவர்கள் வாழ் நாள் முழுவதும் வீணுகி விடுகிறது. வேலைக்கும் செல்ல முடியவில்லை. மிகவும் பின் தங்கியவர்கள் ஒரிரண்டு மார்க்குகள் குறைவாக வாங்கியிருந்தால் அவர்களுக்கு விதி விலக்கு அளிக்க வேண்டும். இதற்குத் தகுந்தபடி விதியை மாற்ற வேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன். அல்லது **Service Commission** பரீக்ஷைக்குப் போவதற்கு 35 மார்க்குகள் போதுமானது என்று உடனே விதியைத் திருத்த கூடிய ஏற்பாடு சீக்கிரம் செய்ய வேண்டும்.

"தென் ஆற்காடு ஜில்லா மிகவும் எல்லா வசதி குறைந்த ஜில்லா. அதில் முன்பு எடுத்துக்காட்டியது போல் ஆர்ட்ஸ் கல்லூரி, விவசாயக் கல்லூரி, சக்கரை ஆலை, காகிதத் தொழிற்சாலை இவைகளையெல்லாம் ஏற்படுத்த வேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

"கடைசியாக ஒரு வார்த்தை. டோபிகள் நம்முடைய துணிமணிகளை எடுத்துக்கொண்டு போய் கஷ்டப்பட்டு ஆறுகளிலும், குளங்களிலும், குட்டைகளிலும், ரயில் பாதை ஓரங்களிலும், ஏரிகளிலும் சுத்த மில்லாத் தண்ணீர் நிலையங்களிலும் துணிகளை வெளுத்துக்கொண்டு வருகிறார்கள். அவர்கள் கண்ட தண்ணீரில் நின்று கொண்டு துணிகளைத் துவைப்பதால், பல கிருமிகள் கடித்து யானைக்கால் போன்று வியாதிகளால் துன்பப்படுகிறார்கள். நான் பலபேர்களைக் காட்டி நிரூபிக்க முடியும். **Public Health Act**-ன்படி 50,000 பேர்கள் இருக்கக்கூடிய ஒவ்வொரு

பட்டிணங்களிலும் ஒரு டோபிகானா இருக்க வேண்டுமென்று விதி இருக்கிறது. அரசாங்கம் அதைத் தாங்கள் நேரடியாக கவனிக்காமல் ஸ்தல ஸ்தாபனங்களுக்கு விட்டு விட்டார்கள். ஸ்தல ஸ்தாபனங்களும் வண்ணார்கள் சிறுபான்மையோர்கள் தானே என்று இந்த விஷயத்தில் அலட்சியப்படுத்தி அக்கரை காட்டுவதில்லை. இந்த இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் சர்க்கார் ஸ்தல ஸ்தாபனங்களுக்கு மார்க்கெட், பஸ் ஸ்டாண்ட் இவைகள் கட்டுவதற்கு 175 லட்ச ரூபாய் கடன் கொடுக்கப்போகிறார்கள். அதில் டோபிகானா கட்டஎதுவும் சொல்ல வில்லை. ஆகையால் அப்படிக்கொடுக்கும் கடன் முதலீட்டிலிருந்து டோபிகானாக்களையும் கட்ட வேண்டுமென்று ஸ்தல் ஸ்தாபனங்களுக்கு சர்க்கார் ஒரு உறுதியான உத்தரவு போடவேண்டும். அப்படி பொது மக்கள் துணிகளை நல்ல முறையில் சலவை செய்து கொடுப்பதற்கும், பொதுமக்களுக்கு அனுதினமும் உழைப்பையும கொடுத்து வருகிற வண்ணார்கள் சுகமாக வாழ வழி தேடவும், டோபிகானாக்கள் கட்ட சர்க்காரே முயற்சி எடுத்துக்கொள்ளவேண்டும் என்றும் இதை அதி சீக்கிரம் செய்ய சர்க்கார் சகல நடவடிக்கைகளும் எடுத்துக்கொள்ள வேண்டுமென்றும் கேட்டுக்கொண்டு என் வார்த்தைகளை முடித்துக்கொள்கிறேன்."

* DR. A. LAKSHMANASWAMI MUDALIYAR :—"I should like to join with my colleagues in expressing our thanks to the Government for having placed before us the draft proposals with regard to the Second Five-Year Plan and the connected papers and for having given us this opportunity to discuss the Plan. Several Members speaking on both sides of the House criticised the Plan in various ways and finally ended by supporting the Plan. I propose to reverse that process by *first* thanking the Government and offering my congratulations on their having presented before us their draft proposals with regard to the Second Five-Year Plan and *then* to offer such criticisms as may be found absolutely necessary in regard to the Second Five-Year Plan.

"So far as the Second Five-Year Plan is concerned, it is the duty of every citizen, whether he sits on the Treasury Bench side or on the side of the Opposition (who have not got the good fortune to sit on the Treasury Benches) to try to examine whether the Plan is up to his expectations or not. It is our duty to point out to Government what our views and reactions are so far as the Plan is concerned. It does not mean that Government have not attempted to do their duty as best as they can. I realize that this Government are not wholly free to suggest what they deem necessary in the interests of the people of the State, and that at every stage, they have had to follow directives, instructions, notes, further communications and various advices issued from time to time according to what may be called the Plan Frame, framed by certain individuals in the Centre. Under these conditions I quite realize that the Government had to see as far as possible their recommendations were in compliance with those directives. It is no doubt true that some States have given the go-by to those directives and have thrown overboard many of the suggestions and directives given by the Centre. But we, as loyal and law-abiding people of the State, have always found it necessary to line up within the four corners of the directives issued, whether it be by the Central Government or by the Planning Commission. Therefore we had to restrict ourselves in the manner in which our Plan had to be put before the Central authorities. It is no doubt

